5th September 1958]

*Introduction of Tamil in Government Departments*

*63 *Q.*—**Sri A. VEDARATHNAM** : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) தற்பொழுது தமிழில் நடவடிக்கைகள் நடைபெற்றுவரும் இலாகாக்களை தவிர்த்து இன்னும் எந்த இலாகாக்களில் தமிழில் நடவடிக்கைகளை நடத்த அரசாங்கம் திட்டமிட்டிருக்கிறது ?

(ஆ) பாக்கி இருக்கும் எல்லா இலாகாக்களிலும் தமிழ் மொழி அமுலுக்கு வர எவ்வளவு காலமாகும் ?

The Hon. Sri C. SUBRAMANIAM : (*a*) The Government's intention is to introduce Tamil for official correspondence in all the departments of Government but for administrative reasons, this is being done in stages. The Revenue, Public Works and Agriculture Departments have been taken up first, and the scheme will be introduced for the present up to the district level, i.e., only in offices below the level of heads of departments.

(*b*) It is hoped that it may be possible to introduce Tamil in all the departments excepting courts other than village and panchapat courts, before the end of the Second Plan Period.

**Sri A. VEDARATHNAM** : இப்பொழுது தமிழ் அமலுக்கு வந்திருக்கிற இலாகாக்களில்கூட கடிதப் போக்குவரத்துக்கள் எல்லாம் ஆங்கிலத்தில்தான் நடைபெறுகின்றன. அவற்றை தமிழில் நடைபெறும் படிச் செய்ய அரசாங்கம் முன்வருமா ? அதோடு இன்னும் பல இலாகாக் களில் போதிய தமிழ் டைப் மெஷின்கள் சப்ளையாகவில்லை. அவைகளை எப்பொழுது சப்ளை செய்ய முடியும் என்ற விஷயத்தையும் தயவுசெய்து தெரிவிக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்.

**The Hon. Sri C. SUBRAMANIAM** : டைப்ரைட்டர்கள் எந்தவிதத்தில் அமையவேண்டுமென்று ஒரு முடிவு எடுத்த பிறகு போதிய அளவு டைப்ரைட்டர்கள் தயார் செய்ய ஆர்டர் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகவே கூடிய சீக்கிரத்தில் எந்தெந்த இலாகாக்களுக்கு டைப்ரைட்டர்கள் தேவையோ அவைகள் கொடுக்கப்படுமென்று நான் எதிர்பார்க்கிறேன். இன்னொரு விஷயத்தைப் பற்றி மெம்பர் அவர்கள் குறிப்பிட்டார்கள் அதாவது, சில காரியாலயங்களில் இன்னும் ஆங்கிலத்திலேயே கடிதங்கள் எழுதி வருகிறார்கள் என்று. எந்தெந்த அதிகாரிகளுக்குத் தமிழில் எழுத முடியவில்லையோ அவர்களை, தமிழில் எழுத வேண்டுமென்று நாம் நிர்பந்தப்படுத்தினால் அதன்மூலம் இன்னும் அனர்த்தம்தான் விளையுமேயொழிய நன்மை விளையாது. ஆகவே சட்டம் போட்டிருந்தாலும் கூட ஓரளவு விதிவிலக்கு கொடுத்து படிப்படியாக, இன்று தமிழில் கடிதப் போக்குவரத்து செய்ய முடியாதவர்களும் பழக்கப் படுத்திக் கொண்டு தமிழில் எழுத முன்வரவேண்டும் என்று உத்தரவிடப்பட்டிருக் றது. ஆகவே இடைக்காலத்தில் இதுமாதிரி கஷ்டங்கள் இருக்கத்தான் செய்யும்.

**Sri R. CHIDAMBARA BHARATHI** : இப்பொழுதுள்ள இலாகாக்களைத்தவிர இதர இலாகாக்களிலும் நிர்வாகம் தமிழில் நடக்கவேண்டுமென்ற சம்பிரதாயம் சிறுகச் சிறுக வந்தாலும்கூட டைப்ரைட்டர்களின் தேவையில்லாமலேயே, தமிழ் பேசத் தெரிந்தவர் களாக இருக்கும் அங்கத்தினர்கள் கொண்ட இந்த சட்டமன்றத்தில் பூரா நடவடிக்கைகளும் தமிழில் எப்பொழுது வரும்.

**The Hon. Sri C. SUBRAMANIAM** : அது சபாநாயகரின் கையில் இருக்கிறது. வேண்டுமானால் அவரது அறைக்குச் சென்று அக்கேள்வியைக் கேட்கலாம்.

**Mr. SPEAKER** : சபா நாயகரிடம் சபையில் கேள்வி கேட்க முடியாது. என் அறைக்கு வந்து கேட்டால் பதில் சொல்கிறேன்.

[5th September 1958

SRI K. SATTANATHA KARAYALAR : கன்னியாகுமரி ஜில்லாவிலும், செங்கோட்டைத் தாலுகாவிலும், இன்னும் ரெவின்யூ டிப்பார்ட்மெண்ட்டிலிருந்து அனுப்பக் கூடிய நோட்டிஸ்கள், ரசீது முதலியவைகள் அத்தனையும் மலையாளத்திலேயே இருக்கிறது. அதையாவது உடனடியாக மாற்றி தமிழில் கொண்டு வர உத்தரவு பிறப்பிக்கப்படுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இவைகள் சமீபத்தில் கேரளத்தில் இருந்து வந்த பகுதிகளாதலால் இதுமாதிரியான கஷ்டங்கள் இருக்கலாம். சிறுகச் சிறுக அங்குள்ள அதிகாரிகள் கூடிய சீக்கிரத்திலேயே இப்பொழுள்ளதை மாற்றிக்கொண்டு தமிழில் கடிதப் போக்குவரத்து செய்வார்கள் என்று நம்புகிறேன். சில இடங்களில் மலையாளம் இருக்கலாம் ; எல்லாம் மலயாளத்தில்தான் இருக்கிறது என்று சொல்ல முடியாது. இன்னொன்று, மற்ற மொழி பேசக் கூடியவர்கள் சில பகுதிகளில் ஓரளவு இருந்தால்கூட மற்ற மொழிகளிலும் நோட்டிஸ்கள் பிரசுரிக்க வேண்டுமென்ற தத்துவத்தை ஒப்புக்கொண்டிருக்கிறோம். ஆகவே மலையாளம் பேசக் கூடியவர்கள் அதிகமாக சில பகுதிகளில் இருப்பார்களேயானால் அங்கு தமிழ் அறிக்கையோடு மலையாள அறிக்கையும் கொடுக்கவேண்டுமென்று வைக்கப்பட்டிருக்கிறது.

SRI V. K. KOTHANDARAMAN : ஆங்கிலத்திலேயே வந்து கொண்டிருந்த கேள்விகள் இப்பொழுது தமிழிலும் வந்து கொண்டிருக்கிறது. ஆனால் பதில்கள் இன்னும் ஆங்கிலத்தில்தான் கொடுக்கப்படுகின்றன. அதற்கு காரணம் என்ன ? ஆகவே, இனி உடனடியாக பதில்களும் தமிழில் வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : வெகு சுலபமாகச் சொல்லி விடலாம், தமிழிலே செய்ய வேண்டுமென்று. உப கேள்விகளுக்கு பதில் சொல்லும்போதே தட்டுத்தடுமாறித்தான் பதில் சொல்ல வேண்டியிருக்கிறது. ஏனெனில் தமிழில் சரியான பதங்கள் உடனடியாக வருவது கஷ்டமாயிருக்கிறது. அதோடு இன்னொரு முக்கிய விஷயம் இருக்கிறது. அதாவது, ஒரு பகுதியில் இருந்து மட்டும் தமிழை அபிவிருத்தி செய்து விடலாம் என்று நினைப்பது தவறு. நிர்வாகத்தில் தமிழை உபயோகிக்க வேண்டுமென்று சொன்னால், போதனாமுறை தமிழில் இருந்தாலொழிய நிர்வாகத்தில் அதை உடனடியாகக் கொண்டு வருவது சிரமம். அதோடு தமிழ் எல்லாத் துறைகளிலும் வளர ஒரு முயற்சி எடுக்கவேண்டியது அவசியம். அதுபற்றி சர்க்கார் பரிசீலனை செய்து கொண்டிருக்கிறது. கூடிய சீக்கிரத்தில் தமிழ் வளர்ச்சி எல்லாத் துறைகளிலும் ஏற்படுத்துவதற்கான முறையில் ஒரு திட்டத்தை வெளியிட முடியுமென்று நினைக்கிறேன்.

*Sreepadam lands*

* 64 *Q.*—SRI T. T. DANIEL : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether the Kerala Government have sent to this Government a Bill regarding the Sreepadam lands in the Kanyakumari district and the Shencottah taluk ; and

(*b*) whether the Madras Government have expressed their opinion on the Bill to the Kerala Government?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) The Government of Kerala have not sent any Bill for the opinion of this Government.

(*b*) Does not arise.